Registered No. M. 2330

SIDDHANTHAM
Vol. 33—No. 5



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'நன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

| மலர் 33 | சார்வரி வைகாசி 1960 மே | இதழ் 5 |
| --- | --- | --- |

உள்ளுறை — பக்கம்

சேக்கிழாரும் சைவ சித்தாந்தமும் ... 129
திருமுறைகளில் பாலாறு ... 145
திருமந்திரம் ... 147
தத்துவ இரத்தினகரம் ... 150
திருவாசகத் தலங்கள் ... 154
கடவுளால் முடியாத காரியங்கள் ... 155

பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 — தனிப்பிரதி அணா

# The Central Government's Hindu Religious Endowments Commission

The terms of reference of the Central Government's Hindu Religious Commission (Chairman, Dr. C. P. Ramaswami Ayyar) are as follows :—

(*a*) To examine generally the institution of Hindu Religious Endowments and to recommend the classes of such endowments which should be treated as public religious endowments.

(*b*) To inquire into the manner in which Hindu public Religious Endowments are being managed and the resources thereof are being utilised, and to recommend ways and means for the proper management of such endowments and the proper utilisation of their resources.

(*c*) In particular, to inquire into the manner in which holders of offices in relation to Hindu Public Religious Endowments are being chosen, whether by way of succession, nomination or otherwise.

(*d*) To examine whether the existing arrangements in regard to the manner in which holders of such offices are being chosen are satisfactory and if not, to suggest ways and means for improving the same.

(*e*) To inquire into and report on any other matter relevant to any of the matters specified above, which, in the opinion of the commission, requires to be inquired into.

The Commission has notified that memoranda by interested bodies or individuals may be submitted to it immediately addressed to the Secretary of the Commission care of The Law Ministry, Government of India, New Delhi. Those wishing to give evidence may also write to that address.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு

மலர் 33 | சார்வரி வைகாசி 1960 மே | இதழ் 5

## சேக்கிழாரும் சைவசித்தாந்தமும்*

(முருகவேள்)

முன்னுரை : சேக்கிழார் பெருமான் நமது செந்தமிழ் நாட்டின் "தேசீய கவிஞர்." அவர் இயற்றியருளிய திருத்தொண்டர் புராணம் நம் நாட்டின் ஒப்புயர்வற்ற "தேசீய காவியம்." ஆங்கிலேயர்கள் தமது நாட்டின் அரும்பெருங் கவிஞர் ஆகிய 'ஷேக்ஸ்பியர்' என்பவரைக் குறித்துப் பல்வேறு கோணங்களில் வெவ்வேறு வகைகளில் விதவிதமாக ஆராய்ந்து பெருமிதங் கொண்டு மகிழ்கின்றனர். ஷேக்ஸ்பியர் கடவுள் நம்பிக்கை யுடையவரா? இல்லாதவரா? அவர் கத்தோலிக்கரா? பிராடஸ்டண்ட் பிரிவினரா? பாஸிஸ்டா அன்றி ஜேகோபினா? அவர் எத்தகைய அரசியற் கொள்கையுடையவர்? இந்நாளில் அவர் இருந்திருப்பின் நாடு மொழி இனம் கலை நாகரிகம் அரசியல் பொருளியல் அருளியல் முதலிய ஒவ்வொன்றனையும் குறித்து எவ்வெவ்வாறு கருதுவார்? என்றெல்லாம் எண்ணியெண்ணிப் பார்த்து எத்துணையோ பலப்பல புதுப்புது நூல்களை எழுதி வெளியிட்டு வருகின்றனர்.† அதுபோல, நாமும் நமது அருமைச்

*காஞ்சிபுரம் திருவேகம்பநாதர் பங்குனி யுத்திரப் பெருவிழாவில், மெய்கண்டார் கழகச் சார்பில், நிகழ்த்திய சொற்பொழிவினைத் தழுவியது (6-4-60).

† 'Another aspect of the Wonder has been the annexation of Shakespeare as their particular

சேக்கிழார் பெருமானைக் குறித்துப் பலப்பல துறைகளில் ஆராய்ந்தறிதல் நம்மனோர்க்குப் பெருநலம் பயக்கும்.

**சேக்கிழாரும் சித்தாந்த நூல்களும்:** சேக்கிழார் பெருமான் திருமுறையாசிரியர்கள் பலருள் ஒருவர். சைவ சித்தாந்தம் என்பது ஆசிரியர் மெய்கண்டார் முதலிய சந்தானா சிரியர்களால் விளக்கப் பெற்ற சிவநெறிக் கொள்கை. திருமுறைகள் பன்னிரண்டு என்றும், சித்தாந்த சாத்திரங் கள் பதினான்கு என்றும் தனித்தனியாகவே பிரித்துக் குறிப்பிடப் பெறுகின்றன. சேக்கிழார் பெருமான் சிவனடி யார்களாகிய அறுபான் மும்மை நாயன்மார்களின் வரலாறு களைப் பாடியவர். அவர் தமது திருத்தொண்டர் புராணத்துள் சைவ சித்தாந்தக் கொள்கைகளை நிரலே கிளந்தெடுத்துக் கொண்டு வரையறை செய்து வகுத்துரைக்க விளக்கத் தலைப்பட்டிலர். 'சைவ சித்தாந்தம்' என்னும் பெயரால் சிவநெறிக் கொள்கைகளை வரையறை செய்து, அறிவியல் முறைப்படி தடை விடைகள் அமையவும் தருக்கநெறி முறை களுக்கு ஏற்பவும் செவ்விதின் அமைத்து விளக்கியருளிய பெருமக்கள், ஆசிரியர் மெய்கண்டார், அருணந்திசிவனார், உமாபதிசிவனார் முதலினோர்களே யாவர். சேக்கிழார்

---

prophet by almost every sect of worshippers, philosophers, and politicians. Saint and devil have vied in quoting Shakespeare to their purpose. He can be toasted at Birthday junketings and on 'Immortal memory' occasions with equally sincere fervour by Catholics, Protestants, and Agnostics, by Optimists and Pessimists, by Aristocrats and Levellers, by the most chaste of pietists and by those who inwardly agree with Ally Sloper's Dook Snook that a 'dirty mind is a continual feast'. By the method of your citation you can make him Fasist or Jacobin with ease......In any fair-sized library 'Shakespeareana' make up an entire department, no mere shelf or case..."

—IVOR BROWN

பெருமான் காலத்தில் சிவஞானபோதம், சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம் முதலிய சித்தாந்த சாத்திரங்களுள் எதுவும் தோன்றியிலது. அவைகளெல்லாம் சேக்கிழார் பெருமான் காலத்திற்குச் சிறிது பின்னரே தோன்றலாயின. இந்நிலையில், சேக்கிழார் பெருமான் தமது நூலில் ஏதேனும் சைவ சித்தாந்தக் கருத்தினையோ, அல்லது அதற்குரிய குறியீட்டுச் சொற்களையோ சொற்றொடர்களையோ வழங்கியிருக்கின்றனரா? என ஆராய்ந்தறிய முற்படுதல், நம் அறிவிற்குப் பெருவிருந்தாக அமையும்.

**சேக்கிழார் பாடலில் சித்தாந்தக் குறியிடுகள் :** சேக்கிழார் பெருமான் "சித்தாந்த சாத்திரங்கள்" தோன்றுதற்கு முன்னரே வாழ்ந்திருந்தவராயினும், பதி பசு பாசம் இருவினை மும்மலம் பெத்தம் முத்தி சரியை கிரியை யோகம் ஞானம் இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் தீக்கை சிவலிங்கம் திருநீறு திருவைந்தெழுத்து முதலியன போன்ற பல சைவ சித்தாந்தக் குறியீட்டுச் சொற்களையும், அவற்றோடு தொடர்புடைய பலவகைக் கருத்துக்களையும் ஆங்காங்கே தமது நூலில் ஏற்ற பெற்றி குறிப்பிட்டுச் செல்கின்றார். அவற்றுள் ஒரு சில முதன்மையான செய்யுட்களை மட்டும் ஈண்டுக் காண்போம் :

"பொடியார்க்கும் திருமேனிப் புனிதற்குப் புவனங்கள்
முடிவாக்கும் துயர்நீங்க முன்னைவிடம் அமுதானால்
படியார்க்கும் அறிவரிய **பசுபதியார்** தம்முடைய
அடியார்க்கு நஞ்சமுதம் ஆவதுதான் அற்புதமோ?"

"**இருவினைப் பாசமும் மலக்கல்** ஆர்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட
அருளும்மெய் அஞ்செழுத் தரசை இக்கடல்
ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ?"

"**பந்தம் வீடு** தரும்பரமன் கழல்"

"நிலவிய இரு வினை வலையிடை நிலைசுழல்பவர் நெறிசேர்
புலனுறுமன னிடைதடைசெய்த பொறிகளின் அள வுளவே."

"நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்ட போதில்
அலைப்பட்ட ஆர்வமுதற் குற்றம்போல் ஆயினர்"

" போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றி உடன்ஆனார் "

" ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந் திரமாலை "

" நலஞ்சிறந்த ஞானயோகக் கிரியா சரியையெலாம்
மலர்ந்தமொழித் திருமூல தேவர்..."

" நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏறத் தாமும்
பேணுதத் துவங்கள் என்னும் பெருகுசோ பானம் ஏறி
ஆணையாஞ் சிவத்தைச் சார அணைபவர் போல ஐயர்
நீள்நிலை மலையை ஏறி நேர்படச் செல்லும் போதில் "

"முன்னைவல் வினையும் நீங்கி முதல்வனை அறியுந் தன்மை
துன்னினன் வினைகள் ஒத்துத் துலையென நிற்ற லாலே "

"இந்தவெப் படையநீங்க எனக்கருள் புரிவீர் என்று
சிந்தையால்தொழுதுசொன்னான் செல்கதிக்கு அணியன்ஆனான்"

" திங்கள்சேர் சடையார் தம்மைச் சென்றவர் காணு முன்னே
அங்கணர் கருணை கூர்ந்த அருட்டிரு நோக்கம் எய்தத்
தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட் டகல நீங்கிப்
பொங்கிய ஒளியின் நீழற் பொருவிலன் புருவம் ஆனார் "

" காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்
நீள்நாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம் "

" தோற்றும் மன்னுயிர் கட்கெலாம் தூய்மையே
சாற்றும் இன்பமும் தண்மையும் தந்துபோய்
ஆற்ற அண்ட மெலாம்பரந்து அண்ணல்வெண்
நீற்றின் பேரொளி போன்றது நீள்நிலா.

" பஞ்சின் மெல்லடிப் பாவையர் உள்ளமும்
வஞ்ச மாக்கள்தம் வல்வினை யும்பரன்
அஞ்செ ழுத்தும் உணரா அறிவிலோர்
நெஞ்சும் என்ன இருண்டது நீண்டவான்"

" ஆதி மந்திரம் அஞ்செழுத் தோதுவார் நோக்கும்
மாதி ரத்தினும் மற்றைமந் திரவிதி வருமே ?"

என்பன போன்று வரும் பெரிய புராணப் பாடல்கள் பல வற்றில் சேக்கிழார் பெருமான் சைவ சித்தாந்தக் குறியீட்டுச் சொற்களையும் கருத்துக்களையும் ஆங்காங்கே குறிப்பிட்டருளி யிருத்தல் அறிந்தின்புறற்பாலது.

"ஓதிய எழுத்தாம் அஞ்சும்
உறுபிணி வரத்தாம் அஞ்சும்"

என்பன போன்று வரும் அரிய இனிய அழகிய வரிகள் கற்பார் நெஞ்சம் களிதுளும்பச் செய்யும். இத்தகைய பொருள் பொதிந்த சிறந்த வரிகள் பெரிதும் போற்றற்பாலனவாம். ("A single beautiful line has wrought the world more good than all the masterpieces of mechanism"—*Anatole France*)

**சேக்கிழாரும் உமாபதி சிவமும்:** இங்ஙனம் சேக்கிழார் பெருமான் தமது பாடல்களிற் குறிப்பிட்டுள்ள சைவ சித்தாந்தக் குறியீட்டுச் சொற்கள் சொற்றொடர்கள் கருத்துக்கள் என்பனவற்றை மட்டுமே யன்றி, இனி வேறொரு வகையிலும் இப்பொருளை ஆராயலாம். சேக்கிழாரின் பெரிய புராண வரலாறுகள் சைவ சித்தாந்த நூல்களில் எவ்வகையிலேனும் இடம் பெற்றுள்ளனவா? சைவ சித்தாந்த சாத்திரங்களை அருளிச் செய்த சந்தானாசிரியர்கள் சேக்கிழாரின் பெரிய புராணத்தின்பால் ஈடுபாடு கொண்டு மதித்துப் போற்றினர் என்பதற்கு ஏதேனும் சான்றுகள் உண்டா? என்பன போன்ற செய்திகளை ஆராய்தலும் ஈண்டுப் பொருந்துவதாகும்.

சேக்கிழார் பெருமான் 'அநபாயன்' என்னும் சிறப்புப் பெயர் கொண்ட இரண்டாம் குலோத்துங்கனின் காலத்தவர் (கி. பி. 1123—1148) என்பது பெரும்பாலான ஆராய்ச்சியாளர்களின் துணிபு. சந்தானாசிரியர்களின் காலம் இதற்கு முன்னையதோ பின்னையதோ என்பதைத் தெளிந்து கொள்ளுதல் ஈண்டைக்கு இன்றியமையாததாகும். சந்தானாசிரியர்களின் வரிசையில் நான்காமவராக விளங்கும் உமாபதி சிவாசாரியர் வாழ்ந்தருளிய காலம் கி. பி. 1313க்குச் சிறிது முன்னும் பின்னும் ஆகும் என்பது, அவர் இயற்றியருளிய 'சங்கற்ப நிராகரணம்' என்னும் நூலின்கண்,

"ஏழுஞ் சிறுநா றெடுத்த ஆயிரம்
வாழுநற் சகனம் மருவா நிற்ப"

எனப் போதரும் வரிகளாற் பெறப்படுகின்றது. ஆதலின், அவர் சேக்கிழாரின் காலத்திற்குச் சிறிது பிற்பட்டவர் என்பது தேற்றம். அவர், சேக்கிழார் பெருமான் வாழ்ந்து பெரிய புராணம் இயற்றிய தில்லைக்கணித்தாக உள்ள 'கொற்றவன் குடி'யில் வாழ்ந்தவர். ஆதலின், அவர் சேக்கிழார்பால் ஈடுபாடு கொண்டவராய்ப் பெரிய புராணத்தினைப் போற்றி மகிழ்ந்திருப்பர் எனக் கொள்ளுதலில் தடையில்லை. "சேக்கிழார் புராணம்" "திருமுறை கண்ட புராணம்" என்பன உமாபதி சிவத்தின் பெயரால் வழங்குதலும் ஈண்டுக் கருதுதற்குரியது.

சங்கற்ப நிராகரணத்தின்கண் சிவசமவாதி மறுப்பில் "ஐந்தொழில் உயிரும் தந்திடல் தகுமே? ஆவதென்? முன்னாள் நாவலர் பெருமான் பண்டொரு முதலை யுண்ட மைந்தனை வரவழைத்தனன் என்றாய்! பிழைப்பிலது அதூஉம், தந்திட வேண்டும் என்றனர் அன்றே!" எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் முதலை யுண்ட மைந்தனை வரவழைத்துத் தந்ததும், ஈசுவர அவிகார வாதி மறுப்பில் "காழி மாநகர்க் கவுணியர் கடவுள் ஞானமாகிய நற்பதிகங்கள் எழுதுறும் அன்பர்தம் இன்புறு மொழியால், களிறென அணைந்த கல்மனப் புத்தன் முருட்டுச் சிரம் ஒன்று உருட்டினர்; அன்றி வாய்ந்தவாள் ஒன்று ஏந்தினர் இலரே" என, ஞானசம்பந்தரின் "திருப்பதிகம் எழுதுறும் அன்பர் ஒருவர்" (சம்பந்தச்சரணாலயர்) போதிமங்கைப் புத்தநந்தியின் தலையுருளச் செய்ததும் ஆகிய நிகழ்ச்சிகளைச் சுட்டியுள்ளார். அன்றியும் சைவவாதி மறுப்பில், "சிரபுரச் சிறுவரும், அரசராகிய தருணத் தலைவரும், முதிர்பர சமயத்து இசுமுறும் அரசரும்" எனத் திருஞான சம்பந்தரும் சேரமான் பெருமாளும் திருநாவுக்கரசரும் ஆகிய நாயன்மார்களை முறையே குறிப்பிட்டுள்ளார்.

இம்மட்டோ! போற்றிப் பஃறொடையில், இறைவனின் மறக்கருணையைப் பற்றி விளக்குங்கால், பெரிய புராணத்தின் தொடக்கத்தில் சேக்கிழார் பெருமானால் சிறப்புறச் செவ்வி திற் பாடப்பெற்றுள்ள மனுநீதிச் சோழனின் வரலாற்றைத் தக்கமுறையில் எடுத்துக்காட்டாகப் பயன்படுத்தியுள்ளார். இன்னோன்ன செய்திகளெல்லாம் சேக்கிழார்க்கும் சைவ

சித்தாந்தத்திற்கும் உள்ள இயைபுகளைத் தெளிவுற விளக்குவனவாம். இங்ஙனமே, மேலும் பலசான்றுகள் உமாபதி சிவம் சேக்கிழார் பெருமானிடத்தும், அவர்தம் நூலின்மாட்டும் கொண்டிருந்த பெரும் பற்றையும் பெரும் பயிற்சியையும் தெளிவுறுத்த எடுத்துக் காட்டுதல் கூடும்.

"பார்வைஎன மக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம்
போர்வைஎனக் காணார் புவி"

எனவரும் திருவருட்பயன், "கண்ணில் நீடு பார்வையொன்று கொண்டு காணும் அன்பர்முன் எண்ணில் பார்வை கொண்டு வேடர் எம்மருங்கும் ஏகினர்" எனவரும் பெரியபுராணச் செய்யுளை நினைப்பிப்பதாகும். இவ்வாறே,

"செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பானும்
உய்வான் உளன்என் றுணர்"

எனவரும் திருவருட் பயன்,

"செய்வினையும் செய்வானும் அதன்பயனும் கொடுப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக் கில்லையென
உய்வகையாற் பொருள்சிவன்என் றருளாலே உணர்ந்தறிந்தார்"

எனவரும் சேக்கிழார் திருமொழியின் எதிரொலியே ஆகும் என்பதில் ஐயமில்லை.

உமாபதிசிவம் சிவப்பிரகாசம் என்னும் நூலில் "வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தம்" எனவும், "வேதத் தலை தரு பொருள்" எனவும் அருளிச் செய்ததற்கு அடிப்படை,

"பண்ணின் பயனும் இன்னிசையும்
பாவின் பயனும் இன்சுவையும்
கண்ணின் பயனும் பெருகொளியும்
கருத்தின் பயனும் எழுத்தஞ்சும்
விண்ணின் பயனும் பொழிமழையும்
வேதப் பயனும் சைவமும்போல்
மண்ணின் பயனும் அப்பதியின்
வளத்தின் பெருமை வரம்புடைத்தோ"

என ஆசிரியர் சேக்கிழார் பெருமான் அருளிச் செய்ததே

யாகும். இக்கருத்தினை வலியுறுத்தும் வகையில் அருணந்தி சிவாசாரியர் "வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள். வேறு இவற்றின் விரிந்த நூல்கள். ஆதி அனாதி அமலன் தரும் நூல் இரண்டும். ஆரண நூல் பொது. சைவம் அருஞ் சிறப்பு நூலாம். நீதியினால் உலகர்க்கும், சத்திநிபாதர்க்கும் நிகழ்த்தியது. நீள்மறையின் ஒழிபொருள், வேதாந்தத் தீதில் பொருள் கொண்டுரைக்கும் நூல் சைவம். பிறநூல் திகழ் பூர்வம். சிவாகமங்கள் சித்தாந்தம் ஆகும்" என வரையறுத் துரைத்தருளியதும், ஆசிரியர் சேக்கிழார் பெருமான் "வேத நெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க" என்றதன் விரிவுரையே எனலாம்.

சேக்கிழாரும் அருணந்திசிவமும் : இஃதொன்றே! "சகலாகம பண்டிதர்" என விளங்கிய அருணந்தி சிவாசாரியர் சேக்கிழார் பெருமானைப் பெரிதும் மிகப் போற்றிப் பயின்றிருப்பர் என்பதில் ஐயமில்லை. அதனை விளக்கும் சான்றுகள் பலவுள்ளனவேனும்,சுருக்கம்பற்றி மிக முதன்மை வாய்ந்த ஒன்றிரண்டு சான்றுகளை மட்டும் ஈண்டுக் காண்டல் அமையும். அருணந்திசிவம் 'சிவஞான சித்தியார்' என்பதொன்றேயன்றி,இருபா இருபஃது எனப் பிறிதொரு நூலும் இயற்றியுள்ளார். அதன்கண்,

"காண்பார் யார்கொல் காட்டாக் கால்எனும்
மாண்புரை யுணர்ந்திலை மன்ற! பாண்டியன்
கேட்பக் கிளக்கும் மெய்ஞ்ஞா னத்தின்
ஆட்பா லவர்க்கருள் என்பதை அறியே."

எனப் போதரும் வரிகளில், திருஞானசம்பந்தர் அருளிய "வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்" எனத் தொடங்கும் திருப்பாசுரத்தினைப் 'பாண்டியன் கேட்பக் கிளக்கும் மெய்ஞ் ஞானம்' எனப் புகழ்ந்து போற்றியுரைத் தருளுகின்றார்! இறைவனையோ - உலகுயிர்களையோ - சமணர்களையோ கருதி இத்திருப்பாசுரம் பாடப்பெறாமல், பாண்டியன் கேட்பதற் காகவே கிளக்கப்பெற்றது என அருணந்திசிவம் விதந்தெடுத் துக் கூறியதற்குக் காரணம்,

"உலகியல் வேதநூல் ஒழுக்கம் என்பதும்
நிலவும்மெய்ந் நெறிசிவ நெறிய தென்பதும்
கலதிவாய் அமணர் காண்கிலார்கள் ஆயினும்
பலர்புகழ் தென்னவன் அறியும் பான்மையால்"

எனச் சேக்கிழார் பெருமான் கிளந்தெடுத்து மொழிந்தமையினை உட்கொண்டே யாகும். அன்றியும், "செம்பிரத குளிகையினால் களிம்பற்றுப் பொன்னாய்ச் செம்பொனுடன் சேரும். மலம் சிதைந்தாற் சிவன் நம்பனுடன் கூடும். நற்குளிகை போல் அரன் நணுகுமலம் போக்கி அம்பொனடிக் கீழ்வைப்பன்..." எனவரும் சிவஞானசித்தியார் (சுபக்கம் 319) செய்யுட் பொருள்,

"முன்புதிருக் காளத்தி முதல்வனார் அருள்நோக்கால்
இன்புறுவே தகத்திரும்பு பொன்னானாற் போல்யாக்கை
தன்பரிசும் வினையிரண்டும் சாருமலம் மூன்றும்அற
அன்புபிழம் பாய்த்திரிவார் அவர்கருத்தின் அளவினரோ?"

எனவரும் பெரியபுராணப் பாடலில் சேக்கிழார் சுவாமிகளால் அரிய முறையிற் சுட்டப்பட் டிருத்தல் காணலாம்.

இனி வேறொன்றும் கருதற்பாலதுளது. அருணந்தி சிவனார்க்கும் அவர்தம் நூலுக்கும் தனிப்பெருஞ் சிறப்பைத் தருவது சிவஞான சித்தியார் பரபக்கப் பகுதி. அருணந்தி சிவனார் உண்மையிலேயே "சகலாகம பண்டிதர்" தான் என்பதனை மெய்ப்பித்து விளக்கி நிற்பது பரபக்கப் பகுதியே யாகும். இங்ஙனம் பரபக்கப்பகுதி ஒன்றினை இயற்றுதல் வேண்டும் என அருணந்தி சிவம் கருதுதற்கும், அஃதியற்றும் நெறி இதுவென உணர்தற்கும் வழிகாட்டியவர் சேக்கிழார் சுவாமிகளே யாவர் எனலாம். பரபக்கப் பகுதியில் அருணந்திசிவம் விரிவாக மறுத்துரைத்திருப்பது, மாத்தியமிகர் யோகாசாரர் சௌத்திராந்திகர் வைபாடிகர் என்னும் நால்வகைப் பௌத்தர்களில், சௌத்திராந்திகர் என்னும் பிரிவினரையே யாகும். ஆசிரியர் சேக்கிழார் பெருமான் இக்கொள்கையினரையே திருஞானசம்பந்தர் வரலாற்றில் (செய்யுள் 914 முதல் 921 வரை) 'சம்பந்த சரணாலயர்' என்னும் அன்பர் கூற்றில் வைத்துத் திட்ப நுட்பமும் சுருக்கவிளக்க

மும் அமையத் திறம்பட மறுத்துரைத்துள்ளார். இவ்விரு பகுதிகளையும் புடைபட வைத்து ஒப்பிட்டுக் காணவல்லார் "சகலாகம பண்டிதர்" ஆகிய அருணந்தி சிவனார் சேக்கிழார் பெருமானைப்போற்றியுள்ள திறமுணர்ந்து பெரிதும் மகிழ்வர் என்பது தேற்றம்.

**சேக்கிழாரும் மெய்கண்ட சிவமும்:** இனி, மெய் கண்டார் பற்றி ஒரு சிறிது ஆராய்தல் வேண்டும். மெய் கண்ட தேவர் சேக்கிழார்க்குப் பிற்பட்டவர் என்பதே திரு. கோபிநாதராயர் முதலிய வரலாற்று ஆராய்ச்சியாளர் களின் துணிபு. "திருவெண்ணெய் நல்லூருடையான் மெய் கண்டதேவன் ஊருடைய பெருமாளான எடுத்தது வலியவே ளார்" எனத் திருவண்ணாமலைக் கோயிலிலுள்ள கல்வெட்டு ஒன்று இவரைக் குறிப்பிடுகின்றது. மெய்கண்ட தேவர் தமது கொள்கைகளைத் திறம்பட எடுத்து நிறுவ வல்லவராகத் திகழ்ந்த சிறப்புப்பற்றி "எடுத்தது வலிய வேளார்" எனப் பாராட்டி யுரைக்கப்பெற்றனர் போலும். இக் கல்வெட் டின் வாயிலாக மெய்கண்ட சிவத்தின்காலம் கி. பி. 1232 என்று ஐயுறவின்றித் துணியப்பட்டுள்ளது. ஆதலின், அக் காலத்தில் வாழ்ந்த ஆசிரியர் மெய்கண்ட தேவர் பெரிய புராணத்தினை உரிய முறையிற் போற்றி மகிழ்ந்திருப்பர் எனக் கொள்ளுதலில் இழுக்கொன்றும் இல்லை.* "சான்றோர் சான்றோர் பாலர் ஆப" என்பது சான்றோர் கூறிய வாய்மை. "ஞானத்தால் தொழுவார்கள் தொழக்கண்டு, ஞானத்தாய் உனை நானும் தொழுவனே" என நாவரசர் நவின்றிருப்ப தும் இக் கருத்துக்கு அரண்செய்யும். இவ்வடிப்படையில் ஆராய்ந்தால், மெய்கண்ட தேவர் பெரிய புராணத்தின் தெளி பொருட் பெரும் பிழிவினையே வடித்தெடுத்துச் "செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா அம்மலங் கழீஇ, அன்பரொடு

---

*" A great writer is not an isolated fact. He has his affiliations with the present and the past; and through these affiliations he leads us inevitably to his contemporaries and predecessors......"

—W. H. HUDSON

மரீஇ, மாலற நேயம் மலிந்தவர் வேடமும், ஆலயந்தானும் அரனெனத் தொழுமே" எனத், தமது "சிவஞான போதம்" என்னும் சைவ சித்தாந்தத் தலைமணி நூலின் கண் இறுதிச் சூத்திரமாக அமைத்துள்ளார் என்பதனை ஐயுறவின்றி அனைவரும் உணர்வர். "தாம் தம் உணர்வின் தமியருள் காந்தம் கண்ட பசாசத் தவையே" எனவரும் சிவஞானபோதப் பகுதி,

"செல்லுமா மறையோன் தன்பின் திரிமுகக் காந்தம் சேர்ந்த
வல்இரும்பு அணையு மாபோல் வள்ளலும் கடிது சென்றார்"

எனவரும் பெரிய புராணப் பாடலை நினைப்பிக்கும் சீர்மைய தாகத் திகழ்தலை அறிஞர்கள் உணர்ந்து அகமிக மகிழ்வர்.

திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார்: இனி, மெய்கண்ட தேவரின் சிவஞானபோதத்திற்கும் முற்பட்டன வாகக் கருதப்பெறுவன, திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் என்னும் சைவ சித்தாந்த சாத்திரங்கள் ஆகும். இவை முறையே திருவியலூர் உய்யவந்த தேவ நாயனார், திருக்கட வூர் உய்யவந்த தேவநாயனார் என்னும் சான்றோர்களால் இயற்றப்பெற்றன. அருணந்தி சிவமும் உமாபதி சிவமும் தம் நூல்களில் மெய்கண்ட தேவரைப் போற்றியிருத்தல் போல, இவர்கள் போற்றக் காணாமையின், இவ்விருவரும் மெய்கண்ட சிவத்திற்குப் பிற்பட்டவராகாமல் ஒரு சிறிது முற்பட்டவர்கள் ஆதல் வேண்டும். இருவரும் ஆசிரிய மாணவ முறையில் உடனுறைந்து ஒரே காலத்தினராகத் திகழ்ந்தவர்கள். திருக்களிற்றுப்படியாரில் (53) சேந்தனார் வரலாறு குறிக்கப்படுதலின், அதனை இயற்றியருளிய ஆசிரி யரின் மேலெல்லைக் காலம் 10-ஆம் நூற்றாண்டுக்கு முற் பட்ட தாகாது. கீழ் எல்லைக்காலம் யாதாக இருத்தல்கூடும் என ஆராயும்வழி, "ஊட்டி யறுத்தவர்க்கே ஊட்டி யறுத்த வரை நாட்டியுரை செய்வதென்னோ நாம்?" என்னும் திருக் களிற்றுப்படியார் செய்யுள் (20),

"ஆட்கொளும் ஐயர் தாம்இங்கு அமுதுசெய் திலர்கொல் என்னப்
பூட்டிய அரிவாள் பற்றிப் புரையற விரவும் அன்பு

காட்டிய நெறியின் உள்ளந் தண்டறக் கழுத்தி னூடே
ஊட்டியும் அரியா நின்றார் உறுபிறப்பு அரிவார் ஒத்தார்''

என்னும் பெரிய புராணப் பாடலின் அடியொற்றி அமைந் திருத்தல் அறியப்படுகின்றது. ஆதலின், மூலநூல் போலத் திகழும் திருவுந்தியாரும், அதற்கு ஓர் அழகிய உரைபோல அமைந்துள்ள திருக்களிற்றுப்படியாரும் பெரிய புராணத் திற்குப் பிற்பட்டதாதல் தெளியப்படும். இவற்றின் காலம் முறையே கி. பி. 1147 என்றும், கி. பி. 1177 என்றும் கொள்ளப்பட்டுள்ளது. 'திருச் சிலம்போசை' 'பெற்ற சிற்றின்பமே' 'பெண்டிர் பிடிபோல' என்னும் திருவுந்தி யார் செய்யுட்கள் முறையே சேரமான் பெருமாள் சுந்தர மூர்த்திகள் காரைக்காலம்மையார் என்பவர்களை நினைப்பூட்டி நிற்கின்றன எனலாம். திருக்களிற்றுப்படியாரிலோ பலப் பல நாயன்மார் வரலாறுகள் குறிப்பிடப் பெற்றுள்ளன. அப்பர் சம்பந்தர் சுந்தரர் என்பவர்களேயன்றி, அதன்கண் சிறுத்தொண்டர் சண்டீசர் அரிவாட்டாயர் கண்ணப்பர் திருக் குறிப்புத் தொண்டர் கோட்புலியார் மூர்த்தியார் மூர்க்க நாய னார் மங்கையர்க்கரசியார் என்பவர்களைச் சுட்டித் திருக் களிற்றுப்படியாரிற் பல பாடல்கள் இருத்தலைக் காணலாம். மேலும் இந்நாயன்மார்களின் வரலாறுகளைப் பெரியபுராண வாயிலாக அறிந்துணர்ந்த அரும்பெறற் பயன்போல, அவர் தம் செயல்களையெல்லாம் மேல்வினை என்றும், வல்வினை என்றும் பாகுபாடு செய்து,

"மெல்வினையே என்ன வியனுலகில் ஆற்றரிய
வல்வினையே என்ன வரும்இரண்டும்—சொல்லிற்
சிவகன்மம் ஆம்.அவற்றிற் சென்றதிலே செல்வாய்
பவகன்மம் நீங்கும் படி"

எனப் பெரியபுராண வரலாறுகளிற் சிலர் கொள்ளும் ஐயம் தெளியும் வகையையும், திறந்தெரிந் துணர்த்தித் தெளிவித் திருக்கும் முறை, பெரிதும் மிக வியந்து போற்றற்பாலது.

வில்லியம் ஜேம்ஸ் என்னும் உளநூற் பேரறிஞர், மக்களை யெல்லாம் 'மெல்லிய உள்ளத்தினர்' (Tender-

minded) என்றும், 'கடின உள்ளத்தினர்' (Tough-minded) என்றும் இருதிறத்தினராகப் பிரித்திருப்பதும் ஈண்டு இதனோடு கருதி மகிழ்தற்குரியது. இவைகளெல்லாம் சந்தானாசிரியர்கள் சைவ சித்தாந்தக் கொள்கைகளை உருவாக்கித் தொகுத்துத் தருதற்குச் சேக்கிழாரும், அவர் தம் பெரிய புராணமும் பயன்பட்ட திறனைத் தெள்ளிதின் விளக்கவல்ல சான்றுகள் எனலாம்.

**சித்தாந்த உள்ளுறைப் பொருள் :** இனி, வேறொரு நெறியிலும் இப்பொருள் குறித்துப் பேசி விளக்குதல்கூடும். பெரிய புராண வரலாறுகள் உண்மையில் நடந்த நிகழ்ச்சிகளேயாகும் எனினும், அந்நிகழ்ச்சிகளைப் பாடும் முறையிற் சிற்சில வரலாறுகளிற் சைவ சித்தாந்த நுண்பொருட் கருத்துக்கள் பொலிந்து புலனாகும்படி, சேக்கிழார் தமது ஒப்புயர்வற்ற தெய்வப் பெற்றிமை மிக்க புலமையினாற் செய்துள்ளனர். அவற்றை விளக்க விரும்பி விரிப்பிற் பெருகுமாயினும், ஈண்டு ஒரு சிறிது சுருங்கக்கூறி முடிப்பல். எறிபத்தர் வரலாறு யாவரும் இனிதறிந்தது. அதன்கண், கருவூர் உடல். ஆனிலை புருவ நடு. பசுபதி சிவபிரான். சிவகாமியாண்டார் பக்குவம்பெற்ற நல்லுயிர். பூக்குடலை மனம். பூக்கள், கொல்லாமை ஐம்பொறியடக்கம் பொறுமை இரக்கம் அறிவு மெய் தவம் அன்பு என்னும் 'எண்வகை மலர்கள்.' சிவகாமியாண்டார் தமது மலர்க்கையில் கொண்ட தண்டு யோகப் பயிற்சிக்குரிய 'வீணா தண்டு.' யானை ஆணவமலம். பாகர் இருவரும், இருவினைகள். பரிக்காரர் மூவரும் சுத்தம் அசுத்தம் சுத்தா சுத்தம் என்னும் மூவகை மாயைகள், அரசன் திரோதான சத்தி. எறிபத்தர் ஞானாசிரியர். அவர் தாங்கியிருந்த பரசு ஞானவாள் என, உள்ளுறைப்பொருள் (Allegorical significance) கொள்ளவும் ஏற்றவாறு பல குறிப்புகள் சேக்கிழார் சுவாமிகள் பாடலில் அமைந்துள்ளமை காணலாம். இங்ஙனமே கண்ணப்பர் வரலாற்றிலும் நாகன் ஆணவம், தத்தை மாயை, காடன் கன்மம், நாணன் மாயேயம், கண்ணப்பர் பக்குவான்மா, காளத்தி முதல்வர்

திருநோக்கம் திக்கை, சிவகோசரியார் திரோதாயி, ஆறு நாட்கள் தொண்டியற்றல்-வன்னம் பதம் மந்திரம் கலை தத்துவம் புவனம் என்னும் ஆறு அத்துவாக்களும் தூய்மையடைதல் எனக் கொள்ளத்தக்க குறிப்பின் அமைந்திருத்தலும் ஈண்டு அறிதற்குரியது.

முடிவுரை: சேக்கிழார் மிகச் சிறந்த ஒரு சைவ சித்தாந்த ஞானனுபவப் பெருஞ் செல்வர். 'கலையின்கண் மனிதன் தான் வெளியிட மேற்கொண்ட பொருளையன்றித் தன்னையே வெளிப்படுத்துகின்றான்' ("In art, man reveals himself and not his objects") என அறிஞர்கள் கூறும் உண்மைக்கேற்ப, நம் அருமைச் சேக்கிழார் பெருமானும் தமது சைவ சித்தாந்த ஞானனுபவத்தினையே, "ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள..." "தெண்ணிலா மலர்ந்த வேணியாய் உன்றன் திருநடம் கும்பிடப் பெற்று மண்ணிலே வந்த பிறவியே எனக்கு வலிதாம் இன்பமாம்..." என்னும் பெரிய புராணப் பாடல்களால், சுந்தரமூர்த்திகளின் ஞானனுபவமாக வைத்துப் பாடியருளி யிருக்கிறார் எனக் கோடல் கூடும். இவைகளெல்லாம் சேக்கிழார்க்கும் சைவ சித்தாந்தத்திற்கும் உள்ள பலதிற இயைபுகளை நலமுறத் தெளிவிக்கும் செய்திகள் ஆகும்.

"செப்ப லுற்ற பொருளின் சிறப்பினால்
அப்பொ ருட்குரை யாவரும் கொள்வரால்
இப்பொ ருட்கென் னுரைசிறி தாயினும்
மெய்ப்பொ ருட்குரி யார்கொள்வர் மேன்மையால்"

"மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
துதிசெயும் நாயன்மார் தூய சொல்மலர்
பொதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே!"

---

# திருமுறைகளில் பாலாறு

["சைவநெறிக் காவலர்" டாக்டர்-திரு. மா. இராசமாணிக்கனர் அவர்கள், எம்.ஏ., எல்.டி, எம்.ஓஎல்., பிஎச்.டி.]

**பாலாற்றின் தோற்றம்:** மைசூர் நாட்டில் பெங்களூர், கோலார், தும்கூர், மைசூர், ஹாசன், கடூர், ஷிமோகா, சித்தல் துர்க்கம் என எட்டு மாவட்டங்கள் உள்ளன. ஒவ்வொரு மாவட்டத்திலும் பல வட்டங்கள் (தாலுக்காக்கள்) உண்டு. கோலார் மாவட்டத்தில் சிக்பல்லபூர் என்னும் பெயர்கொண்ட வட்டம் ஒன்ருகும். அவ்வட்டத்தில் நந்திதுர்க்க மலைத் தொடர் இருக்கின்றது. அத்தொடரில் திப்பகிரி, பிரமகிரி, சென்னகேசவமலை, அரிகரேசுவரமலை, கலவரதுர்க்கம், நந்தி துர்க்கம் எனப் பல மலைகள் உண்டு.

சென்னகேசவமலை கடல் மட்டத்திற்குமேல் 4762 அடி உயரமுள்ளது. இம்மலை நந்திதுர்க்கத்திற்கு வடமேற்கிலும் சிக்பல்லபூர்க்குத் தென்மேற்கே ஐந்துகல் தொலைவிலும் உள்ளது. இதன் உச்சியில் அடர்ந்த காடுகள் உள்ளன. இம்மலையின் வடபகுதியில் தோன்றும் ஆறு உத்தர பிநாகினி என்பது; தென்பகுதியில் தோன்றும் ஆறு தட்சிண பிநாகினி என்பது. இவை முறையே வடபெண்ணையாறு என்றும், தென்பெண்ணையாறு என்றும் தமிழில் பெயர்பெறும். இவ்விரண்டு ஆறுகளுக்கும் இடையில் பாலாறு தோன்றுகிறது.

**பாலாற்றின் போக்கு:** கோலார் மாவட்டத்தில் தோன்றும் பாலாறு கோலார் வட்டம், முல்பாகல் வட்டம், சீநிவாசபுர வட்டம், பௌரிங்பேட்டை வட்டம் ஆகியவற்றின் வழியாகத் தென்கிழக்கில் பாய்கின்றது; பௌரிங்பேட்டை வட்டத்தின் கிழக்கில் மைசூர் நாட்டைக் கடந்து, வடஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த பழைய கங்குண்டி சமீன் சீமையை அடைகிறது.

கங்குண்டி சீமையை அடைந்த பாலாறு முப்பதுகல் சென்று கிழக்குத் தொடர்ச்சி மலைகளின் வழியே பாய்ந்து வாணியம்பாடிப் பள்ளத்தாக்கை அடைகிறது. பின்பு அது சவ்வாது மலைகளின் குறுக்கீட்டால் சிறிது வடக்கே சென்று

பின்பு கிழக்கு நோக்கிப் பாய்கிறது. ஆர்க்காட்டிற்குக் கிழக்கே ஐந்துகல் தொலைவில் பாலாற்றின் குறுக்கே ஓர் அணை கட்டப்பட்டுள்ளது. காவேரிப்பாக்கத்திற்கு அப்பால் இந்த ஆறு செங்கற்பட்டு மாவட்டத்துக் காஞ்சிபுர வட்டத்துள் நுழைகிறது; காஞ்சிக்குத் தென்கிழக்காகச் சென்று, செங்கற்பட்டுக்கு அப்பால் மேலும் தெற்காகச் சென்று இறுதியில் கிழக்கு நோக்கிப் பாய்ந்து, சதுரங்கப்பட்டணத்திற்குத் தெற்கே மூன்றுகல் தொலைவில் கடலில் கலக்கின்றது. இப்பாலாற்றின் நீளம் ஏறத்தாழ 230 கல் ஆகும்.

**கல்வெட்டுச் செய்தி :** காவேரிப்பாக்கத்திற்கு அருகிலுள்ள கொண்டாபுரம் என்னும் சிற்றூரில் இருக்கும் கோவில் கல்வெட்டு ஒன்று, அக்கோவில் பாலாற்றுக்குத் தெற்கே இருப்பதாகக் குறித்துள்ளது. ஆயின், இன்று அக்கோவில் பாலாற்றுக்கு வடக்கில் இருக்கிறது. இதனை நோக்க, எக்காரணத்தாலோ, பின் நூற்றாண்டுகளில், காவேரிப்பாக்கத்திற்கு அருகிலிருந்து பாலாற்றின் போக்கு வடக்கிலிருந்து தெற்கு நோக்கி இருத்தல் வேண்டும் என்பது தெளிவாகிறது.

இங்ஙனம் பாலாற்றின் போக்கு மாறக் காரணம், பாலாறு காஞ்சியை அடுத்துச் செல்லவேண்டும் என்ற நோக்கத்தோடு காஞ்சிக் காவலனது உயர் அலுவலனான கண்ட கோபாலன் என்பவன், அரசன் விருப்பப்படி, ஆற்றின் போக்கை மாற்றினான் என்று செவிவழிச் செய்தி செப்புகின்றது.

**திருமுறைச் சான்றுகள் :** இச் செவிவழிச் செய்தியும் கல்வெட்டுச் செய்தியும் உண்மையே என்பதைத் திருமுறைகள் மெய்ப்பிக்கின்றன. காவேரிப்பாக்கம் ஏரி மிகப் பெரியது. அந்த ஏரியிலிருந்து வெளிப்படும் மிகுதியான நீரே கொர்த்தலையாறு என்னும் பெயருடன் வடகிழக்கில் பாய்கின்றது. அது வழியில் திருத்தணிகையாறு, நகரியாறு என்பனவற்றின் நீரைப் பெற்றுச் சென்னைக்கு வடகிழக்கிலுள்ள எண்ணூருக்கு அருகில் கடலில் கலக்கின்றது. இக் கொர்த்தலையாறு பாயும் காவேரிப்பாக்கம் பள்ளத்தாக்கில் ஒரு காலத்தில் பாலாறு பாய்ந்திருத்தல் வேண்டும் என்று

ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். பாலாற்றுப் படுகையையும் கொர்த்தலையாற்றுப் படுகையையும் இணைக்கும் சிற்றாறு ஒன்று இன்றும் "பழைய பாலாறு" என்னும் பெயரில் இருப்பதே இங்ஙனம் கருதக் காரணமாகும். இஃது உண்மையாக இருக்கலாம் என்பதைக் கீழ்வரும் உண்மைகளும் மெய்ப்பிக்கின்றன :

காஞ்சிக்கு வடமேற்கே ஏழுகல் தொலைவிலுள்ள திருமாற்பேறு என்னும் சிவத்தலம் பாலாற்றின் தென்கரையில் இருந்தது என்று கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞானசம்பந்தர் தமது பதிகத்தில் பாடியுள்ளார்.

" திரையார் பாலியின் தென்கரை மாற்பேறு "

கி. பி. 12-ஆம் நூற்றாண்டில் திருஞானசம்பந்தர் முதலிய சைவப் பெரியார்களின் வரலாறுகளைப் பெரிய புராணம் என்னும் பெருங்காவியமாகப் பாடியருளிய சேக்கிழார் பெருமானும் இதனையே கூறியுள்ளார். திருமாற்பேற்றுக்கு அண்மையில் உள்ள கோவிந்தவாடி அகரம் என்னும் ஊரில் "பழைய பாலாறு" என்னும் பெயருடன் ஒரு யாறு இன்றும் காணப்படுகின்றது.

காஞ்சியிலிருந்து கலிங்கத்தின்மீது படையெடுத்துச் சென்ற சோழர் படைத்தலைவனான கருணாகரத் தொண்டைமான் காஞ்சிக்கும் கலிங்கத்திற்கும் இடையே பல ஆறுகளைக் கடந்தான். அவற்றில் முதல் ஆறு பாலாறு என்று கி. பி. 11-ஆம் நூற்றாண்டில்—முதற் குலோத்துங்க சோழன் காலத்தில் பாடப்பட்ட கலிங்கத்துப்பரணி கூறுகிறது. எனவே, கி. பி. 11-ஆம் நூற்றாண்டில் பாலாறு காஞ்சிக்கு வடக்கே பாய்ந்துகொண்டிருந்தது என்பது தெளிவாகிறதன்றோ ?

சென்னைக்கு மேற்கே ஏறத்தாழப் பதினைந்துகல் தொலைவிலுள்ள பூந்தமல்லிக்கு வடக்கே இரண்டுகல் தொலைவில் திருவேற்காடு என்னும் சிவத்தலம் இருக்கிறது. இது பாலாற்றின் வடகரையில் இருந்தது என்று சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் கூறியுள்ளார். இன்று இங்குள்ள யாறு "பழைய பாலாறு" என்றும், "காடுவெட்டியாறு" என்றும் கூறப்படுகிறது.

திருவேற்காட்டிற்கு வடகிழக்கில் ஏறத்தாழ ஆறுகல் தொலைவில் வடதிரு முல்லைவாயில் என்னும் சிவத்தலம் அமைந்துள்ளது. அப்பதி பாலாற்றின் வடகரையில் இருந்த தாகக் கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சுந்தரர் தமது பதிகத்தில் பாடியுள்ளார் :

"சந்தன வேருங் காரகிற் குறடுந்
தண்மயிற் பீலியுங் கரியின்
தந்தமுந் தரளக் குவைகளும் பவளக்
கொடிகளுஞ் சுமந்துகொண் டுந்தி
வந்திழி பாலி வடகரை முல்லை
வாயிலாய் மாசிலா மணியே
பந்தனை கெடுத்தென் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே."

சென்னையிலிருந்து அரக்கோணம் செல்லும் இருப்புப் பாதையை அடுத்துள்ள இலம்பையங்கோட்டூர், திருவிற் கோலம் (கூவம்), திருவூறல் (தக்கோலம்) என்னும் சிவத் தலங்களும் பாலாற்றின் வடபால் இருந்தன என்று சேக்கிழார் கூறியுள்ளார்.

பாநூர்க் கல்வெட்டு : திருப்பாசூரில் உள்ள சிவன் கோவிலில் ஐம்பத்து மூன்று கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவற்றுள் ஒன்று கலிங்கத்துப்பரணி கொண்ட குலோத் துங்க சோழனது நாற்பத்தி ஆறும் ஆண்டு ஆட்சியில் வெட் டப்பட்டது. அது,

"ஆமூர்க்கோட்டத்து மொங்தூர் நாட்டு மொங்தூர்ப் பாண்டிப்பாக்கம், ஒற்றிகொண்டானுக்குக் கீழ்மலை போசுர் நாட்டு இராசநாராயண சதுர்வேதிமங்கலத்து மகாசபையார் நிலத்தை விற்றனர். இறைவன் இறைவியரின் திருமஞ்சனத் துக்குப் பாலாற்று நீரைக் கொணரவும் நந்தவனம் அமைக் கவும் அந்நிலம் விற்கப்பட்டது" என்பது கல்வெட்டுச் செய்தி. (123 of 1929—'30).

திருப்பாசூருக்கு அண்மையில் பாலாறு ஓடிக்கொண் டிருந்தது என்பது இக்கல்வெட்டால் நன்கு விளங்குகிறது அன்றோ ?

முடிவுரை : இச்சான்றுகள் அனைத்தையும் நோக்கக் கி. பி. 12-ஆம் நூற்றாண்டு வரையில் பாலாறு, காஞ்சிக்கு வடக்கிலுள்ள திருமாற்பேறு, வடகிழக்கிலுள்ள திருவேற்காடு, திருமுல்லைவாயில், திருப்பாசூர் வழியாகச் சென்று கடலில் கலந்திருத்தல் வேண்டும் என்பது தெளிதல் காண்க.

---

# திருமந்திரம்

(தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி முதல்வர்-முதுபெரும் புலவர்-முத்து - சு. மாணிக்கவாசக அடிகள்)

## 2

" தூய்மை அருள் ஊண்சுருக்கம் பொறைசெம்மை
வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றிவை
காமம் களவு கொலைஎனக் காண்பவை
நேமியீ ரைந்தும் நியமத்த னாமே" (556)

இது நியமம் என்னும் தலைப்பின்கண் அடங்கியுள்ள திருமந்திரப் பாடல். இதனுள் இரண்டாவதடியீற்றில் 'மற்றிவை' என்றுளது. இதுவே உண்மைப் பாடம் எனக் கொண்டுள்ளன பல பதிப்புக்கள். சிலர் அதற்கும் உரையிட்டனர். அவ்வுரை செவ்வுரையா? வெவ்வுரையா? எவ்வுரை என்று அறிஞர் அறியவல்லார். சைவசித்தாந்த சமாசப் பதிப்பில் (1933) 'மாற்றுப' என்னும் பாடம் உண்டென்று கீழ்க் காட்டியும் இத்தவற்றையே மேற்கொண்டது.

காமம் களவு கொலை எல்லாம் யோகாங்கம் எட்டனுள் ஒன்றான நியமத்துக்குரியன ஆமோ? நியமத்துள் காமமும் களவும் கொலையும் உளவேல், உலகோர்க்கு நல்லுரை, அறிவுரை, மெய்யுரை, அருளுரை எல்லாம் வேறு வேண்டுமோ? காமம் முதலியன இயற்கையில் உடைய உயிர்களெல்லாம் யோகாங்கம் ஆகிய நியமத்தை உடையன ஆகாவோ? இதனை ஆராய்ந்தோ பிழை எனக் கூறல் வேண்டும்? திருமந்திரப் பதிப்புக்களுள் இப்பிழை தொடர்ந்து நிலவுகின்றது எனின், திருமுறைப் பாராயணம் புரியும் சைவ நன்மக்களது பத்திக்கு எல்லையுண்டோ?

" ஆரும் அறியார் அளக்கின்ற வன்னியை
ஆரும் அறியார் அளக்கின்ற வாயுவை
ஆரும் அறியார் அழிகின்ற அப்பொருள்
ஆரும் அறியா அறிவறிந் தேனே." (786)

இதன் மூன்றுவதடியில் 'அழிகின்ற' என்றிருக்கின்றது. 'அளக்கின்ற'என்னும் பாடமும் அடியிற் குறிக்கப்பட்டுளது. அதுவே 'தத்துவம்' என்னும் உண்மைக்கு மாருகாதது.

" நூறு மிவகு நகருஞ் சிவத்தினீர்
மாறு மிதற்கு மருந்தில்லை மாந்தர்கள்
தேறில் இதனைத் தெளியுச்சி கப்பிடின்
மாறும் இதற்கு மறுமயி ராமே." (847)

இதன் ஈற்றடியின் பிற்பாதியின் பொருள் என்ன? அப்பொருட்கும் இப்பாட்டின் கருத்துக்கும் ஏதேனும் தொடர்புண்டோ? திருமந்திரம் குருட்டுப் பாடமாகச் சைவர் வழக்கில் இருக்கின்றமைக்கு வேறு ஓர் எடுத்துக் காட்டு வேண்டுமோ? இது 'மறுமையிராமே மாறும்' என்று உணர்த்தும் பொருட்டு. இதற்கெனக் காட்டிய பாடபேதம் இதனினும் கேடுற்றுளது. ஏட்டினியல்பையே மெய்யெனக் கொண்டுரைத்தல் எல்லா இடங்களிலும் பொருந்தாது என்ப தற்கு இதுவும் சான்ருகும்.

' தாண்டவ மான தனியெழுத் தோரெழுத்
தாண்டவ மான தனுகிரகத் தொழில்..' (888)

என்பதன்கண் 'ஓரைந்து' என்னும் பாடமே உண்மை யானது. இப்போதுள்ள பாடம் சிறிதும் பொருந்தாது. அப்பொருந்தாமையை விரித்தெழுதின் பலபக்கம் கொள் ளும். திருவைந்தெழுத்துள் ஒன்றையும் ஐந்தெழுத்தென்பர். இரண்டையும் ஐந்தெழுத்தென்பர். மூன்றையும் ஐந்தெழுத் தென்பர். ஐந்தெழுத்தையும் குறித்தலில் ஐயம் இல்லை. நான்கினைமட்டும் தனியே குறித்தல் இல்லை.

' சேவிக்கும் மந்திரம் செல்லுந் திசையேற
ஆவிக்குள் மந்திரம் ஆதார மாவன
பூவுக்குள் மந்திரம் போக்கற நோக்கிடில்
ஆவிக்குள் மந்திரம் அங்குச மாமே.' (959)

இதன்கண் பிழை இல்லை. இங்கொரு சிறந்த உண்மையை உணர்த்த வாய்ப்புண்டாயிற்று. ஆகலின், இதில் இப்பாடலையும் கொண்டேம். விநாயகர் அகவலுள் 'ஆறுதாரத் தங்குச நிலை' என்றுள்ளதைப் பலரும் அறிவர். அஃது அறிஞர் சிற்சிலரால் வெவ்வேறாகக் கருதப்பட்டது. யாமும் அதை அம்புசம் என்று கொண்டிருந்தேம். அது தவறாகும். 'அங்குசம்' என்பதே உண்மைப் பாடம். 'ஹம்ச மந்த்ரம்', 'அங்குச மந்த்ரம்' என்பன ஒரு பொருள் குறித்து முன்னோரால் ஆளப்படுவன. அதற்குப் பல எடுத்துக்காட்டுக்கள் உள. முதுகெலும்பை அங்குசம் என்பதும் வழக்கே. அதனுள்ளே கணிக்கப்படும் அஜபா மந்திரத்தை இடவாகு பெயராக 'அங்குச மந்திரம்' எனல் பொருத்தமே. அதையே 'அங்குச நிலை' என்றது விநாயகரகவல். இதைக் குறித்துச் சில யாண்டின் முன்னர் என் நண்பர் சைவத்திரு சிவப்பிரகாச தேசிகர் (அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழாராய்ச்சிப் புலவர்) அவர்கள் எது சரியான பாடம் என்று கேட்டார்கள். அப்போது இதனை நிச்சயம் செய்திலேன். அம்புசம் என்றது பொருந்தும் என்று கொண்டிருந்தனம். சுசும்நா என்றும் சுழுமுனை என்றும் கூறப்பட்ட நாடிக்குள்ளே ஜபம் புரியாமற் புரிவது அஜபா மந்திரம். அதன் நிலை ஹம் ஸம் என்றிருதிறத்தது. அங்சம் அங்குசம் என்று அதையே தமிழிற் குறித்தனர் எனல் தகும். முற்கூறிய இடவாகு பெயராகக் கொள்ளலும் தகும். இதன் பாடபேதமாக அங்குசம் எனக் குறித்தலும் நினைக்கத்தக்கது.

'மேதாதி யீரெட்டுமாகிய மெல்லியல்' (1070) என்றது மேதாகலை முதலிய பதினாறு பிராசாத கலைகளையும் உணர்த்திற்று. ஒருவர் இதற்கு 'உணர்த்து மெய் ஐந்தும் உணர்வு மெய் ஐந்தும் உட்கலன் நான்கும் ஆகப் பதினாறு மெய்களும் அம்மையால் இயக்கப்படுகின்றன' என்று உரையெழுதி, 'மேதாதி யீரெட்டு - மேதை முதலிய தத்துவங்கள் பதினாறு' (1046) என்று விளக்கமும் செய்துள்ளார். இதைப்போல எண்ணிலாதன அவருரையில் உள்ளன. சைவத் திருமுறை

களைக் கெடுத்துக்கொண்டு வரும் சிவபத்தருள் அவரும் அடங்கினர். மெய்கண்ட நூல்களைக் கெடுப்பவர் பலருளர். அருளுருவான பண்டார சாத்திரத்தை உரையெழுதிக் கெடுத்தார் 'பெரும் புலவர்' ஒருவர்.

'இயைந்தனள் ஏந்திழை யென்னுள்ள மேவி
நயந்தனள் அங்கே நமசிவ யென்னும் பயன்' (1115)

எனவும்

'நாம நமசிவ யென்றிருப் பார்க்கு
நேமத் துணைவி நிலாவி நின்றாளே' (1213)

எனவும் இருந்து, இவ்விரிடத்தும் உயிரைக் கொலை செய்தன திருமந்திரப் பதிப்புக்கள். 'யகரம்' (உயிர்) 'என்னும்' 'என்று' என்ற வருமொழியுடன் இணைந்தமை அறியாத குற்றம் இது.

(தொடரும்)

---

# தத்துவ இரத்தினாகரம்

(அம்பை சங்கரனார்)

நம் தமிழ்மொழியில் பல நூல்கள் இருந்தன. அவற்றை "வாரணங் கொண்ட தந்தோ வழிவழிப் பெயரு மாள" என்று ஒருபுலவர் நினைந்து உருகினர். சென்றன போக எஞ்சியனவற்றையாவது செவ்வனே தமிழுலகம் போற்று கின்றதாவெனில் அதனையும் காணோம். இன்னும் ஏடுகளில் நம் பெரியோர்கள் எழுதி வைத்த நம் நாட்டு அறிவுக் களஞ்சியங்கள் நிறைய உள. அவைகளை ஆய்ந்து நன் முறையில் அச்சிட்டு வெளியிடுவது செல்வர்கள், அறிஞர்கள் தம் கடமையாகும். அவ்வாறு வெளிவாராது மறைந்து கொண்டிருக்கிற நூற்களுள் ஒன்று தான் தத்துவ இரத்தின கரம் என்பது. அது பற்றிச் சில விவரங்களைக் காண்போம்.

இத்தத்துவ இரத்தினாகரத்தைப் பற்றி மதுரைத் தமிழ்ச் சங்கச் "செந்தமிழ்" வாயிலாய்ச் சில செய்திகள் பல்லாண்டு களுக்கு முன்னர் வெளிவந்திருக்கின்றதாகக் கேள்வி யுற்றிருக்கின்றேன். இந்நூல் மொத்தம் 1043 பாக்களைக் கொண்ட ஒரு சிறந்த ஏடு. சிதல் தற்பொழுது இவ்வேட்டில்

தன் வலிமையைக் காட்ட முனைந்து கொண்டிருக்கின்றது. ஏடு தேடித் தந்த ஏந்தலார் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களுக்கு இந்த ஏடு கிடைத்துள்ளது. அது தற்பொழுது அடையாற்றிலுள்ள டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்திலிருக்கின்றது. அந்நூல் நிலையத்தார் தக்கமுறையில் செப்பஞ் செய்து சிதலுடன் போரிட்டுக் கொண்டிருக்கின்றார்கள். ஆகவே இந்நிலையில் இன்னும் காலம் தாழ்க்காது இந்நூலை வெளிவரச் செய்தல் அறிஞர் தம் கடன் என்பதை மறுமுறையும் வலியுறுத்தி மேல் செல்கின்றேன்.

இத் தத்துவ இரத்தினகரத்திற்குப் புவனை கட்கிஷம், கக்கிஷப்படலம் என்றும் வேறு பெயர்கள் உண்டு என்று சொல்கிறார்கள். இந்நூலில் "திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும்" என்ற விநாயகர் வணக்கச் செய்யுள் முதலிலுள்ளது. பின்னர் உள்ள சில பாக்களை எடுத்துக் காட்டாகத் தருகின்றேன்.

"குருபாதம் சிவானந்தம், திருச்சிற்றம்பலம், தத்துவ இரத்தினகரம் கடவுள் வாழ்த்து அருளினது......ஊபரம்பரை" என்று முதலிலுள்ளது.

அருவுருவு மைய மாகி யவையல வாகி வேறும்
பொருளென லாகி வேதா கமாந்தமெய்ப் போத மாகி
யிருளறு பரமா னந்தத் திலகிய சிவப்பிர காசத்
தொருதனி யுறவை மாயப் பிறப்பற உணர்தல் செய்வாம்.

—கடவுள் வாழ்த்து—1

ஐம்பொறி புலன்க ளைந்தோ டைங்க ரணங்களுங்கும்
வெம்பிடச் சகலத் திட்டு விரகமே விளக்கு மாயைக்
கும்பரு மஞ்ச வெஞ்சா வுடலுறு மவற்றை யொட்டி
நம்பா நல்கு மூல நாதனற் றாள்கள் போற்றி.

—அருளிறை வணக்கம்—2

சந்தான பரம்பரை

அனாதியாம் பாரப ரம்பி னதிற்பர மதிலீ சானன்
றனாதியா மகேச னக்கன் மால்சது முகனிந்தி ராதி
யனாதியா லுணர்ந்த வந்த வடைவவ ருணர்ந்த வாற்றான்
முனாதியா கவாக மத்தின் முறைமுற்று ணர்ந்தோ நந்தி. —3

ஆதிய நந்தி தேவ ரருள்பெறு வோர்ச னந்த
ஞதிய சனற்கு மாரன் முனிசனன் சனக னல்வர்
நீவிய சிவயோகத்து மாமுனி திருமன் றேறும்
நீவிய இருவர் மூலன் என்வெண்பா தெளிந்து ளோர்கள். —4

அருள்பெறு மூல தேவ னருளது பெற்றுற் ரோர்கள்
மருளறு பிரமன் மாய னுருத்திரன் வாச வன்று
னிருளில்கா லாங்கி தேவன் கந்துரு விகலார் கஞ்சை
வருதிரு முடியின்...மே லயனே டெழுவ ராமால். —5

இது இந்நூலின் கடைசிப்பாட்டு

ஒழிவில்வே தாந்தந் தன்னல் உற்றசித் தாந்தந் தன்னல்
அழிவிலாச் சித்தி முத்தி ஆனது கூட லாலே
இழிவிலா இந்த நன்னூல் சுத்தசை வத்தி லேய்ந்த
வழியினற் சித்தி முத்தி மறைமுறை வகுத்த தொன்றே—1043

என்று முடிகிறது.

இவ்வேட்டில் மொத்தம் 80 ஓலைகள் உள்ளன.

| | | | |
|---|---|---|---|
| 1. | கடவுள் வாழ்த்து | 1 | (1) |
| 2. | அருளிறை வணக்கம் | 1 | (2) |
| 3. | சந்தான பரம்பரை | 6 | (3—8) |
| 4. | மட முறைமை | 22 | (9—30) |
| 5. | சுத்த சைவ நூல்கள் | 1013 | (31—1043) |

எனப் பிரிக்கப்பட்டிலங்கியுள்ளது.

ஐந்தாம் பிரிவாய "சுத்த சைவ நூல்கள்" என்ற பகுதியில்

| | | | |
|---|---|---|---|
| 1. | சத்து இலக்கணங் கூறல் | 2 | (31—32) |
| 2. | பதி இலக்கணங் கூறல் | 5 | (33—37) |
| 3. | பசு இலக்கணங் கூறல் | 8 | (38—45) |
| 4. | பாச இலக்கணங் கூறல் | 2 | (46—47) |
| 5. | மல விரிவு | 14 | (48—61) |
| 6. | சமயபட்சம் | 2 | (62—63) |
| 7. | உட்சமயம் | 980 | (64—1043) |

என்ற உட்பிரிவுகள் காணப்படுகின்றன. இவ்வுட் சமயம்

என்ற பகுதியில் பல்வேறு தலைப்புகளில் பாக்கள் மிளிர்கின்றன. அவை வருமாறு:—ஊர்த்த சைவம், அனாதி சைவம், ஆதி சைவம், பேத சைவம், அபேத சைவம், அந்தர சைவம், குண சைவம், நிர்க்குண சைவம், ஞான சைவம், அவாந்தர சைவம், கிரியா சைவம், சுத்த சைவம், நாற்பத சைவம், பாசுபதம், காளாமுகம், வாமம், வயிரவம், சிவாத்துவிதம், சிவசம்மேளனம், புறச் சமயம், வைசேஷிகன், மீமாங்கு...கன், சாங்கியம், வயிணவம், பாட்டம், வைகரணியம், மாயாவாதம், மந்திரவாதம், சந்திரவாதம், சூரியவாதம், அவிடவாதம், உள்ளவாதம், தர்க்க வாதம், இயந்திர வாதம், (இவை போன்று பல சங்கற்பங்கள், பல தன்மங்கள் கூறிச் செல்கின்றது) சமயத் தொகுதி, அனாதி சிருட்டி, அத்துவாவகை, தத்துவ நிண்ணயம், (இதினுட் பிரிவுகள் பலவும் கூறப்பட்டுள்ளன) முதலியன. இது கடைசியில் "ஞான சித்தி" என்ற பகுதியோடு முடிகின்றது.

சில திங்கள்களாகத் திருமந்திர ஏடுகளைப் பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. அவ்வமயம் 926 திருமந்திரப் பாக்கள் பொறுக்குமணிகள் போன்றுள்ள சிலவற்றைப் பூசை விருத்தாசலத் தம்பிரான் என்ற பெரியார் திரட்டி அதற்குத் "தத்துவ இரத்தினகரம்" என்ற பெயரையும் கொடுத்திருக்கிறார். அத்திரட்டிற்குத் "திருமந்திரத் தெரிவு" என்று மற்றொரு பெயரையும் சூட்டியிருக்கிறார்.

அவ்வேட்டின் முதலில், "பூசை விருத்தாசலத் தம்பிரான் திருமந்திரங்களிற்றிரட்டி எடுத்த திருமந்திரத் தெரிவு பாட்டுகள் தத்துவ இரத்தினகரம்" என்றெழுதியுள்ளது. ஆகவே திருமந்திரத்திற்கும் "தத்துவ இரத்தினகரம்" என்ற பெயருண்மை இதிலிருந்து தெரிகின்றது. ஆனால் அத்திருமந்திரத்தை ஒட்டியே பின்னர் தத்துவ இரத்தினகரம் செய்யப்பட்டது என்பது இத்தத்துவ இரத்தினகர வணக்கச் செய்யுள்களா லறியலாம்.

இத் தகைய சிறந்த நூல் வெளிவர வேண்டாமா? நம் சைவ உலகம் சிறந்த கருத்துக்களைத் தன்னுள் அடக்கிய

இந்நாலே அழிய விடலாமா ? அழிய விட்டபின் கழிவிரக்கங் கொள்வதில் பயன் என்னையோ ? 'காலமுண்டாகவே' அந்நாலே வெளியிட வேண்டும் முயற்சிகளைக் கொண்மின். இந்நாலைச் சேமித்து வைத்துள்ள டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தார்க்குச் சைவ உலகம் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளது.

---

## திருவாசகத் தலங்கள்*

†அண்ணாமலை 4/149, 172, 184
அரிகேசரி 4/190
†அவிநாசி 50/7
†ஆரூர் 2/73, 4/147, 107, 236, 358, 556
†ஆனைக்கா 193
†இடைமருது 2/75, 4/145, 276, 330, 554
†ஈங்கோய்மலை 2/84, 4/158
உத்தரகோசமங்கை 2/48, 120, 105-124, 152, 293, 329-337, 343, 350, 360, 374
†ஏகம்பம் (கச்சி) 2/77, 4/151, 198, 199, 288, 296
†ஐயாறு 2/85, 4/148, 187, 195, 425
ஒரியூர் 2/68
†கடம்பூர் 2/83, 4/160
கல்லாடம் 2/11
கவைத்தலை 4/187
†கழுக்குன்று 2/89, 4/191, 468-474
†கழுமலம் 2/88
குவைப்பதி 4/188
†குற்றாலம் 2/91, 4/156, 558
†கைலை 2/146, 4/167, 407
கோகழி 1/3, 4/157, 353, 628, 632
சந்திரதீபம் 2/97
சாந்தம் புத்தூர் 2/31
†சிராப்பள்ளி 4/154
சிவபுரம் 1/63, 94; 4/216, 211, 290, 360, 389, 426, 448-457, 609, 610, 612
சிவலோகம் 185, 469, 493, 497, 500, 580, 588, 608, 614
†தில்லை (சிற்றம்பலம், புலியூர், பொது, பொன்னம்பலம்) 1/90 2/1, 127, 128, 141, 145, 4/92, 71, 179, 203, 213, 225, 250, 254, 255, 263, 268, 278, 281, 288, 316, 378-387, 451, 475-484, 559-568
†துருத்தி 2/86, 477
தேவூர் 2/71
நந்தம்பாடி 2/21

---

*சமாஜ 1941ஆ திருவாசகப் பதிப்பைத் தழுவித் தொடர்ந்த எண் தரப்பட்டுள்ளது. †தேவாரம் பெற்றவை.—தி. கி. நா.

பஞ்சப்பள்ளி 2/13
பட்டமங்கை 2/62
†பராய்த்துறை 4/153, 401
†பழனம் 4/159
†பனையூர் 2/87
பாண்டூர் 2/70
†புறம்பயம் 2/90
†பூவணம் 2/50
பூவலம் 2/56, 4/192
பெருந்துறை 1/15, 2/54, 3/68, 4/36, 175, 177, 179-185, 189, 192-194, 203, 236, 250, 284, 292-294, 340, 349, 354, 358, 361, 362, 364-367, 368-377, 388-397, 398-407, 448-473, 506-515, 552, 557, 579-581, 583, 589, 591-598, 617-623, 629-634, 649
பொன்னகர் 40
மகேந்திரம் (மந்திரமாமலை) 2/9, 19, 100, 4/205, 592, 597
†மதுரை (கூடல்) 2/44, 4/90, 91, 182, 290, 294, 527, 598, 649
மேரு (மலை) 203
†வாஞ்சியம் 2/79
வாதவூர் 2/52
†வெண்காடு 2/60
வேலம் புத்தூர் 2/29

---

# கடவுளால் முடியாத காரியங்கள்

[முரு. பழ. இரத்தினம் செட்டியார்]

(மலர் - 33 ; இதழ் - 4 ; 128-ம் பக்கத் தொடர்ச்சி)

“இருப்பது பிரமம் ஒன்றே என்றால் வேறு பொருட்களும் காணப்படுகின்ற காரணம் என்ன?” என்று கேட்பில், “அவை வெறும் தோற்றமாத்திரமே ; உண்மையில் பிரமம் ஒன்றுதான் இருக்கிறது” என வேதாந்தம் சொல்கிறது. தோற்றம் யார்க்கு ? பிரமப்பொருள் ஒன்றுமட்டும் தான் இருந்தால் தோற்றம் அதற்குத் தானே ஏற்படவேண்டும் ? அதற்கு ஏன் இல்லாத பொருட்களின் தோற்றம் ஏற்படுகிறது ? அதன் அறிவில் ஏதேனும் குற்றம் உண்டா ? அறிவில் குற்றம் உள்ள பொருளைப் பிரமம் எனச் சொல்ல முடியுமா ? பொருட்களை வேண்டுமென்றே அது கற்பனை செய்துகொள்ளுகிறதென்றால் பூரண அறிவுப் பொருளாகிய அஃது இல்லாத பொருட்களைக் கற்பனை செய்துகொண்டு இடர்ப்படலாமா ? லீலையாகச் செய்துகொள்ளுகிறதென்றால் மேலே நாம் எடுத்துக்காட்டியவாறு லீலைசெய்ய வேண்டிய

அவசியம் அதற்கு என்ன வந்தது ? மகிழ்ச்சிக் குறைவா ? தன்னிலே பூரண இன்பப் பொருளாக நிற்கும் அதற்கு மகிழ்ச்சிக் குறைவு ஏற்படுமா ? கற்பனை செய்துகொள்ளுவது அதன் இயல்பு என்றால் பிரமத்திற்கு அறியாமை இயல் பென்று கொள்ளவேண்டியது வருமே ? மாயை என்னும் அநிர்வசனப் பொருளால் இஃது ஏற்பட்டது என்றால், வேறு பொருட்களே இல்லையென முன் சொன்னது அடிபட்டுப் போகிறதே? "மாயையைப்பொருளாகவும் சொல்லமுடியாது; பொருள் அன்று என்றும் சொல்லமுடியாது ; அதனாலேயே அதனை அநிர்வசனம் என்கிறோம்." என்றால் அது வெறும் குழப்பமாகாதா ? அப்படியே மாயையால் ஏற்பட்டதென்று வைத்துக்கொண்டாலும் பிரமத்தை மயக்கும் ஆற்றல் மாயைக்கு இருக்கிறதென்று கொள்ளவேண்டியது வரு கிறதே ? எதனாலும் மயக்கப்பட முடியாத பூரண அறிவுப் பொருளை அல்லவா பிரமம் எனச் சொல்ல வேண்டும் ? பிரமம் ஏன் மாயையின் உபாதிக்குட்பட்டதென்பதைச் சொல்லவாராது ; அதற்கு விடையே இல்லை", என்றால் இருப் பது பிரமம் ஒன்றே என்பதை மட்டும் எப்படிச் சொல்ல முடிந்தது? பிரம்ம ஞானிகள் அநுபவத்தால் சொல்கிறார்கள் என்றால், பூரண அறிவுப் பொருளாகிய பிரமம் எனத் தங் களைச் சொல்லிக்கொள்ளும் ஞானிகளுக்குப் பிரமம் ஏன் மாயை வயப்பட்டதென்பதற்கு விடை தெரியாமற் போகுமா? விடை தெரியவில்லை என்றால் அவர்களைப் பூரண அறிவுபெற்ற வர்கள் என்று எங்ஙனம் சொல்வது ? "மெய்ஞ்ஞான நிலையில் இருப்பது பிரமம் ஒன்றே ; வியவகார நிலையில்தான் வேறு பொருட்கள் காணப்படும்" என்றால் வியவகாரநிலை என ஒரு நிலை ஏற்படக் காரணமென்ன? அஞ்ஞானத்தால் வியவகாரநிலை தோன்றுகிறது என்றால் அஞ்ஞானம் யார்க்கு ? பிரமம் மட் டும்தான் இருக்கிறதென்றால் அஞ்ஞானம் அதற்குத்தானே ஏற்படவேண்டும் ? பிரமமே உலகாகவும் உயிர்களாகவும் வடிவெடுத்துக் கொள்ளுகிறதென்றால் அங்ஙனம் வடிவெடுத் துக்கொள்ளவேண்டிய அவசியம் அதற்கு என்ன வந்தது ? அப்படி வடிவுகொள்வதால் அதற்கு ஏற்படும் பயன் என்ன?

பிரமநிலையில் ஏதேனும் குறையிருந்தால் அல்லவா இங்ஙனம் வடிவம் எடுத்துக்கொண்டு தடுமாறவேண்டும்? ஒரு குறையும் இல்லாத அதற்கு ஏன் இந்தத் தொல்லை? வேதங்கள், "பிரமப்பொருள் ஒன்றுதான் இருக்கிறது" எனக் கூறுவதால், அவ்வாக்கைப் பிரமாணமாகக் கொள்ள நாம் கடமைப்பட்டிருக்கிறோம் என்றால், வேத வாக்கியங்கட்கு வேறுவகையான வியாக்கியானங்களையும் பெரியோர்கள் செய்திருக்கிறார்களே? அவற்றை ஏன் நம்பக்கூடாது? "விவாதங்களால் இதனை விளக்க முடியாது; அநுபவத்தால்தான் அறியவேண்டும்." என்றால் பிரமப் பொருளுக்கு அநுபவம் வேண்டியதில்லையே? அநுபவம் பெறவேண்டிய பொருள் வேறொன்று இருக்கவேண்டும் என்றாகிறதே? எனவே எத்தனை விதமாகக் கூறினாலும் சங்கரர் வேதாந்தம் அடிப்படையிலேயே நிற்கமுடியாமல் தடுமாற்றம் அடைவதைக் காணலாம்.

வேறு பொருட்களே இல்லையெனச் சொல்வதாலேயே வேதாந்தத்தில் இத்தனை இடர்ப்பாடுகளும் நேர்கின்றன. "பிரமம் வேறு; உயிர்களே பிறவிக்குள்ளாகின்றன" என்று கொண்டால் இந்த இடர்ப்பாடுகள் நேரமாட்டா. ஆனால், "உயிர்கள் உண்டு; மாயை உண்டு" எனக்கொண்டு அவற்றை இறைவன் உண்டாக்கினான் எனச் சொன்னாலும் முன் எடுத்துக் காட்டியதுபோலப் பல குழப்பங்கள் ஏற்படுகின்றன. ஆகவே இறைவனும் உயிர்களும், மாயையும் உண்டு என்றும் ஆனால் உயிர்களையோ, மாயையையோ இறைவன் புதிதாக உண்டாக்கவில்லை என்றும், அவையும் அவனைப்போலவே யாராலும் உண்டாக்கப்படாமல் அநாதி நித்தியமாக இருக்கின்ற பொருட்கள் என்றும் கொள்வதே ஆத்திகப் பெருமக்களுக்கு ஏற்றதாகும்.

இனிக் கடவுளே இல்லையெனக் கூறும் நாத்திக சமயத்தினரையும் ஒரு சிறிது கவனித்துவிட்டு மேற்செல்வோம்.

"காணப்படுகின்ற இவ்வுலகம் எப்படி உண்டாயிற்று?" என்று நாத்திக சமயத்தினரைக் கேட்டால், "இவ்வுலகம் இயற்கையாய் என்றும் உள்ளது; இதனை யாரும் உண்டாக்கியதில்லை" என்று கூறுகின்றனர். ஆனால் இவ்வுலகத்துச்

சடப்பொருட்கள் எல்லாம் பகுக்கப்படக் கூடியனவாய் இருக்கின்றன என்றும் இவற்றைப் பிரித்துப் பகுத்துக் கொண்டே சென்றால் முடிவில் இவை யாவும் ஒரு சட ஆற்றலாக (Material Energy) மாறுகின்றன என்றும் மாபெரும் விஞ்ஞான மேதையாகிய, "அல்பர்ட் ஐன்ஸ்டின்" (Albert Einstien) கண்ட முடிவை இன்றைய விஞ்ஞானிகள் யாரும் மறுப்பதாகத் தெரியவில்லை. அணு ஆற்றலை வெளிப்படுத்தும் வகையால் ஏனைய விஞ்ஞானிகளும் இச் சித்தாந்தத்தை உறுதிப்படுத்தியே வருகின்றனர். ஞாயிறு, திங்கள், விண்மீன்கள் முதலானவைகளும் சடப்பொருட்களே யாதலால், பிரபஞ்சம் அனைத்திலும் உள்ள சடப்பொருட்கள் யாவும் துவக்கத்தில் ஒரே ஆற்றல் மயமாக நின்றவை என்னும் கருத்து விஞ்ஞான சாத்திரத்தில் இப்பொழுது நன்கு வேரூன்றிவிட்டதால், கடவுள் உண்மையை அதன் வழியின்றே நிறுவுவது எளிதாக இருக்கிறது. ஏனெனில் விஞ்ஞான சாத்திர வளர்ச்சிக்கு அடிப்படையாய் அமைந்த கீழ்க்கண்ட ஒரு விதியை அது நீண்ட காலத்திற்கு முன்பே ஒப்புக்கொண்டு, கடைப்பிடித்து வருகிறது :—

"ஒரு சடப்பொருள் தன் நிலையினின்றும் மாறுதலடைய வேண்டுமானால் அதற்குக் காரணம் அந்தப் பொருளிலேயே இருக்க முடியாது ; அதனின் வேறாய ஒரு பொருளே அந்த மாறுதலைச் செய்யவேண்டும். உதாரணமாகத் தண்ணீர் ஆவியாக மாறுகிறது ; அது தானாகவே ஆவியாக மாறாது. அதனை ஆவியாக்கும் சூடு அதனின் வேறாகவே இருக்கவேண்டும்."

இந்த விதியின்படிதான் பௌதிகப் பொருட்களில் மாற்றம் காணப்படும் பொழுதெல்லாம் அம்மாறுதலுக்குக் காரணம் வேறொன்று இருக்கவேண்டுமெனத் துணிந்து; ஆராய்ச்சிகள் செய்து, புதிய, புதிய பொருட்களின் இருப்பை விஞ்ஞானம் கண்டுபிடித்திருக்கிறது ; கண்டு பிடித்தும் வருகிறது. அதன் அநுபவத்தில் இந்த விதி என்றும் பிழைபட்டதில்லையாதலால் இதனை முடிந்த ஒரு முடிபாக அஃது ஏற்றுக்கொண்டிருக்கிறது. இதே விதியின்படி மேற் குறிப்பிட்ட சட ஆற்றலை இவ்வுலகாக மாற்றும் பொருள்,

அதனின் வேருகவே இருக்கவேண்டும். அது தானுகவே உலகாக மாறியிருக்க முடியாது. பிரபஞ்சத்துச் சடப் பொருட்கள் எல்லாம்—ஞாயிறு, திங்கள், விண்மீன்கள் முதலானவை யாவும்—ஒரே சட ஆற்றல் மயமாக நின்ற நிலையில், அந்த ஆற்றலை இவ்வுலகாக மாற்றிய பொருள் யாதாக இருக்கமுடியும்? எல்லாச் சடப்பொருட்களும் ஆற்றலாக நிற்கும் பொழுது, அவற்றுள் ஒன்று அதனை உலகாக மாற்றியது எனச் சொல்ல வாரது. அடுத்த படியாக இருப்பவை உயிர்களே. உயிர்களும் சடப்பொருட் களினின்றும் தோன்றியவைகளே என்னும் உலகாயதக் கொள்கைப்படி வைத்துக் கொண்டால் அவைகளும் மேற் குறிப்பிட்ட சடஆற்றலாக நிற்குமாதலால், அவை இவ் வுலகை ஆக்கியிருக்கும் எனக் கூற இயலாது. சைவ சித்தாந்தம் கூறுவதுபோல அவை சடப்பொருட்களினின்றும் வேறுபட்ட அறிவுடைப் பொருள்கள் என வைத்துக் கொண்டு ஆராய்ந்தாலும் அவை அந்த ஆற்றலை வியக்கத் தக்க இப்பிரபஞ்சமாக மாற்றியிருக்கும் எனச் சொல்வதற்கு இல்லை. பிரபஞ்ச அமைப்பின் நுட்பங்களையே இன்னும் தெரிந்து கொள்ள இயலாமல் தடுமாறும் உயிர்கள், பிரபஞ் சத்தையே படைத்திருக்கும் என யாரும் சொல்ல முடியா தல்லவா? ஆகவே மூன்ருவது ஒரு பொருளே இந்தச் சட ஆற்றலை உலகாக மாற்றியிருக்கவேண்டும் என்பது உறுதியாகிறது. அறிவுடைப் பொருட்களாகிய உயிர்களையும், அறிவற்ற பொருளாகிய சட ஆற்றலையும் இயைபுபடுத்தி உலகாக மாற்றியிருக்கும் இயல்பை நோக்கும் பொழுது, அந்த மூன்ருவது பொருள் அச்சட ஆற்றலினும் பார்க்க ஆற்றல் மிக்கதாய், அவ்வுயிர்களினும் பார்க்க அறிவு மிக்க தாய் இருத்தல் வேண்டும் என்பதும் தெளிவாகிறது.

விஞ்ஞான உலகம் தான் கண்டு பிடிக்கும் எல்லாவற்றை யும் நேரே கண்ணுல் பார்த்து முடிவுக்கு வருவதில்லை. பூமி சுற்றுவதை நேரே யாரும் பார்க்க முடியாது; எந்த விஞ்ஞானியும் பார்த்ததில்லை; எந்தக் கருவிகொண்டும் அதனை நேரே பார்க்க வாராது. அப்படியிருந்தும் பூமி

சுற்றுகிறது என்று ஐயந்திரிபற எப்படி விஞ்ஞானம் முடிவுக்கு வந்தது? தக்க ஏதுக்களால் அது சுற்றத்தான் வேண்டும் என முடிவு செய்திருக்கிறது. ஏதுக்களால் செய்யப்பட்ட முடிவுகள் விஞ்ஞான உலகில் நிறைய உண்டு என்பதும் கருவிகளால் நேரே பார்த்துக் கண்ட முடிபுகளுக்கு ஒப்பவே ஏதுக்களால் கண்ட முடிபுகளையும் அஃது ஏற்றுக் கொண்டிருக்கிறது என்பதும் யாவருமறிந்த உண்மைகளாகும். ஆகவே தக்க ஏதுவோடு விஞ்ஞான விதியின் படியே மூன்றாவது ஒரு பொருள் இருந்தே தீரவேண்டும் எனக் கொள்ளும் முடிபை விஞ்ஞான சாத்திர மரபுக்கு முரணானதெனச் சொல்ல முடியாது. விஞ்ஞான சாத்திர முடிபுகளையும், அதன் மரபுகளையும் எவ்வித மறுப்பு மின்றி நாத்திகக் கொள்கையுடையவர்கள் ஏற்பவர்களாதலால், அச்சாத்திர மரபின் படியே மூன்றாவது ஒரு பொருள் இருந்தாக வேண்டும் எனக் காணும் முடிபை அவர்கள் மறுப்பதற்கில்லை.

"உலகைப் படைத்தது கடவுள் என்றால் கடவுளைப் படைத்தது யார்?" என நாத்திக சமயத்தினர் கேட்பதுண்டு. ஆனல் அவர்களே, "உலகைப் படைத்தது யாருமில்லை; அஃது என்றும் உள்ளது," எனக் கூறுகின்றனர். அவர்கள் கூற்றுப்படியே—ஆனல் அவர்களால் ஆதாரமாகக் கொள்ளப்படும் விஞ்ஞான சாத்திரத் துணை கொண்ட ஒரு சிறிய திருத்தம் செய்து—அஃதாவது இவ்வுலகைப் படைத்தது யாரும் இல்லை என்று கூறுமல் இவ்வுலக மூலகாரணப் பொருளாகிய சட ஆற்றலை யாரும் உண்டாக்கியதில்லை என்றும், அஃது என்றும் அநாதியாக உள்ள பொருள் என்றும் அதனை உலகாக மாற்றும் பொருள் விஞ்ஞான சாத்திர விதியின் படியே அதனின் வேறுக இருக்கவேண்டுமாதலால், கடவுளாகிய அந்தப் பொருளும் யாராலும் உண்டாக்கப்படாத அநாதி நித்தியப்பொருள் என்றும் நாம் கூறுவதை, "நடு நின்று செய்யும் ஆராய்ச்சியின் முடிபை நாங்கள் எப்பொழுதும் ஏற்றுக்கொள்பவர்கள்" எனக்கூறும் நாத்திகக் கொள்கையுடையாரும் ஒப்புக் கொள்ளுவதே நியாயமாகும். (தொடரும்)

## அப்பர் நினைவு நாள்

2-5-60 திங்கட்கிழமை மாலை 7 மணிக்குச் சமாஜத்தின் சார்பில் திருமயிலைக் கபாலீச்சரத்தில் அப்பர் நினைவு நாள் கொண்டாடப் பெற்றது. சமாஜ உப தலைவர் திரு. நல். முருகேச முதலியார், பி எ. அவர்கள் தலைமையில், ஓதுவாமூர்த்தி திரு. சிங்காரவேல் முதலியாரவர்கள் திருநாவுக்கரசர் வாழ்க்கை வரலாற்றைப் பற்றியும், திரு. வித்வான் பாலூர் கண்ணப்ப முதலியாரவர்கள் "அப்பர் அருள் மொழி" என்ற பொருள்பற்றியும் சொற்பொழிவாற்றினார்கள். அவ்வருள்மொழிகளை, வைணவ பட்டாசாரியர்கள் விஷ்ணு ஆலயங்களில் திவ்யப் பிரபந்தம் ஓதுவதுபோல், சிவாலயங்களிலும் சிவாசாரியர்களும் குருக்கள்மார்களும் ஓதவேண்டுமென்று திரு. கண்ணப்ப முதலியாரவர்கள் கூறினார்கள். சிவாலயங்களில் தேவாரம் ஓதி அர்ச்சனை செய்யுங்காலம் வரவேண்டுமென்றும் தெரிவித்தார்கள்.

**அப்பர் திருவிழா:** திருமுண்டீச்சரம் கிராமத்திலுள்ள ஸ்ரீ லோகநாத சுவாமி ஆலயத்தில் 21-4-60 வியாழக்கிழமை நடைபெற்றது. அதுபோழ்து திரு. சுப. சேவு. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்கள் விழாவைத் துவக்கிவைத்தார்கள். திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி எ., எல்.டி. அவர்களும், குடந்தை திரு. ப. சுந்தரேசன் அவர்களும் முறையே, 'ஆண்டவனும் ஆலயமும்.' 'நாவுக்கரசரின் வாக்கின் நன்மை' என்னும் பொருள்கள் பற்றிப் பேசினார்கள்.

## செய்திச் சுருக்கங்கள்

**வாலாஜாபாத் இந்துமத பாடசாலையின் 44-ம் ஆண்டு நிறைவு விழா:** 10-4-1960-ல் சென்னை அற நிலையப் பாதுகாப்புத் துறைத் துணை ஆணையாளர் திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார், பி.எ., பி.எல். அவர்கள் தலைமையில் நடைபெற்றது. "வாலாஜாபாத் குருகுலத்தில் சிறுவர்கள் நல்ல குடிமக்களாக விளங்குதற்குரிய எல்லாம் கற்றுக் கொடுக்கப்படுகிறது. இங்குப் படிக்கும் பேறு பெற்றவர்கள் வருங்காலத்தில் நாட்டின் பல துறைகளிலும் சிறந்து விளங்குவார்கள்" என்று தலைவர் அவர்கள் முன்னுரையில் குறிப்பிட்டார்கள். சென்னை, ரிசர்வ் பாங்கியின் பொருளாளர் - திரு. பி. வி. விசுவநாத ஐயர், எம்.எ. அவர்கள் மாணவ மாணவிகட்குப் பரிசுகள் வழங்கினார்கள். இந்திய அரசாங்கத்தின் துணைச் செயலாளராக இருந்து ஓய்வுபெறும் திரு. வ. சண்முகம் அவர்கள் வாழ்த்துக் கூறினார்கள். காஞ்சிபுரம்-பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. ந. சஞ்சீவி, எம். எ. அவர்கட்குப் பாடசாலையின் சார்பில் ஒரு பாராட்டுரை வழங்கப்பட்டது. பண்ருட்டி-பாக்கு வியாபாரம் திரு. பசுபதி முதலியார் அவர்கள் பாடசாலைக்கு ரூபா இரண்டாயிரத்து ஒன்று நன்கொடையளித்தார்கள். பாடசாலைச் செயலர் அப்பா. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்கள் நன்றிகூறக் கூட்டம் இனிது முடிந்தது.

**ஆர்க்காடு ஸ்ரீ வரசித்தி விநாயகர் பழநியாண்டவர் திருக் கோயில் வார வழிபாட்டு 3-ம் ஆண்டு விழா:** 7, 8-5-60 தேதி களில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. வல்லம்-திரு. மகாவித்துவான் வைத்தியலிங்கம் பிள்ளை யவர்கள் தலைமை தாங்கினர்கள். திரு. ஆ. கோ. கோபால் முதலியார் அவர்கள் உருவப்படம் திறக்கப் பட்டது. வித்துவான் வே. சுப்பிரமணியம் அவர்களும், திரு. எ. ஆர். இந்திரா அம்மையார், எம் ஏ. அவர்களும் முறையே 'சேக்கிழார் செய்யுள் நலம்' 'சிறை இருந்த செல்வி' என்னும் பொருள்கள் பற்றிச் சொற்பொழிவாற்றினர்கள். 'சிவபுராணப் பரிசளிப்பும்' வழங்கப்பட்டது.

**திருவிளையாடற்புராண ஆரம்ப விழா:** திருமயிலைக் கபாலீச் சரத்தில், 4-5-60 புதன்கிழமை மாலை 6½ மணிக்கு, அறநிலையத் துறை ஆணையாளர் திரு. அ. உத்தண்டராம பிள்ளை, ஐ.ஏ.எஸ். அவர்கள் தலைமையில், செந்தமிழ்ச் செல்வர் வித்துவான் பாலூர்-கண்ணப்ப முதலியார், பி.ஓ.எல். அவர்கள், "திருவிளையாடற் புராணப் பிரசங்கத்"தைத் துவங்கினர்கள். பிரதி புதன்கிழமை தோறும் தொடர்ந்து புராணப் பிரசங்கம் நடைபெறும்.

**பூவாளூர்ச் சைவ சித்தாந்த சங்கப் பொன் விழா:** 29, 30-4-60, 1-5-60 ஆகிய நாட்களில், பூவாளூர்-வெள்ளாஞ் செட்டியார் மண்டபத்தில் நடைபெற்றது. திருச்சி திருக்குறள் வேள்-கு. வரதராசன், பி.ஏ. அவர்கள் விழாவைத் துவக்கிவைத்தார் கள். முதல்நாள், தருமபுர ஆதீன தமிழ்க் கல்லூரி முதல்வர்-சித் தாந்த ரத்னகரம் மூத்து-சு. மாணிக்கவாசக அடிகள் தலைமையில் பல அறிஞர்களது சொற்பொழிவுகளும், திருமுறை ஓதுதல், வரவேற் புரை, பொன் விழா மலர் வெளியீடு, அறிக்கை வாசித்தல், வித்து வான்-தியாகராச செட்டியார் படத்திறப்பு, அவரது சரித்திர வெளி யீடு, முதுபெரும் புலவர்-பெருஞ்சொல் விளக்கனர் அ. மு. சரவண முதலியார் படத்திறப்பு முதலியனவும் நடைபெற்றன. இரண் டாம் நாள், தருமபுர ஆதீன மடாலய தேவாலய சமயப்பிரசார நிலை யம் தவத்திரு. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தலைமையிலும், மூன்றாம் நாள் காலை, தவத்திரு-குன்றக்குடி அடிக ளார் தலைமையிலும், பிற்பகல், திரு. அ. ச. ஞானசம்பந்தம், எம்.ஏ. அவர்கள் தலைமையிலும் பல அன்பர்கள் பல அரிய பொருள்கள்பற்றி விரிவுரை ஆற்றினர்கள். பிறகு நன்றியுரையுடன் விழா முடிவுற்றது.

Printed at the Sadhu Press, 15. Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14. Warren Road, Mylapore, Madras-4.